சன்னமாகிறது, பிறசன்னமாயவாற‌து, to appear with benignity. பிறசன்னமுகம், a gracious look upon one.

✦ பிறசாதம், boiled rice which being made an offering of by the heathens, is given by the priests to people ; a gift, grace.

பிறசித்தம், publickly known. பிறசித்தமாகிறது, to become divulged. பிறசித்தம்பண்ணுகிறது, to divulge, publish.

✦ பிறசூதி, breeding. பிறசூதிகாலம், the time to be brought to bed. பிறசூதிவேதை, the labor of a breeding woman. பிறசூதியாகிறது, to be delivered of a child.

பிறசைகள், people, subjects.

✦ பிறதாபம், happiness, glory. பிறதாபிக்கிறது, to enjoy happiness and pleasures.

பிறதானம், the prime, chief, principal, or most eminent thing.

பிறதானி, the prime minister of a king.

பிறதி, a thing like another, or being instead of an other ; a copy. பிறதிகொடுக்கிறது, to give an equivalent. பிறதியுபகாரம், a remuneration. பிறதியெழுதுகிறது, to take a copy. அதுக்குப்பிறதியாய், instead of it. எனக்குன் பேரிலேபத்துப்பணம்பிறதி, you are my debtor for ten fanams.

பிறதிகூலம் v. அநுகூலம்.

பிறதிக்கினை v. பிரதிக்கினை.

✦ பிறதிஷ்டை, a consecration. பிறதிஷ்டைபண்ணுகிறது, to consecrate *a temple etc.*

✦ பிறத்தியட்சம், பிறத்திட்சம், an appearance to the eye. பிறத்தியட்சமாகிறது, to appear clearly to the eye, பிறத்தியட்சமாய், evidently, clearly.

● பிறத்தியுத்தாரம், an answer.

✦ பிறத்தியேகம், பிறத்தேகம், outward, separate. பிறத்தேகமாக, alone, solitarily. பிறத்தேகமாயவைக்கிறது, to lay apart.

பிறந்தகம் v. பிறக்கிறது.

பிறபஞ்சம் v. பிறவஞ்சம்.

✦ பிறபந்தம், a historical collection. பிறபந்தக்காறன், a writer of histories.

✦ பிறபலம், பிறபலியம், famous, renowned, celebrious. பிறபலன், பிறபலியக்காறன், a celebrious person. பிறபலியம்பேசுகிறது, பிறபலஞ்சொல்லுகிறது, to preach up one's self.

✦ பிறபு, a honourable or noble man, a prince, a governor of a province. பிறபுக்கள், noblemen, princes. பிறபுத்துவம், power, dominion.

✦ பிறபை, splendor, brightness, serenity. காந்தியானபிறபை, a clear or fair sky.

பிறப்படுகிறது v. புறப்படுகிறது.

பிறப்பு, nativity, birth.

✦ பிறமாணம், a rule, law. பிறமாணமுள்ளவன், a man of truth and accuracy.

பிறமாணிக்கம், truth. பிறமாணிக்கன், பிறமாணிக்கக்காறன், a man of truth.

✦ பிறமாதம், difficulty.

பிறமிக்கிறது, to grow astonished.

பிறமியம் v. பிரமியம்.

பிறம் v. புறம்.

பிறயத்தினம் v. பிறயெத்தினம்.

✦ பிறலாபம், sorrow, grief, lamentation. பிறலாபிக்கிறது, to be mournful or sad, to behave one's self lamentably.

பிறயோசனம் v. பிறையோசனம்.

பிறவஞ்சம், பிறவஞ்சியம், the world, the way or course of the world.

பிறவடை v. புறம், புறவடை.

✦ பிறவாகம், an overflowing and rapidity of a water.

பிறவி, nativity. பிறவிக்குணம், one's nature or natural disposition. பிறவிக்குருடன், one who is born blind. பிறவித்தோந்தம், what is inbred. பிறவியார், brothers and sisters.

✦ பிறவேசம், entering, entry, entrance. பிறவேசிக்கிறது, to go in, enter. பிறவேசிப்பிக்கிறது, to introduce. பிறவேசம்பண்ணுகிறது, to make your entrance.

✦ பிறளயம், பிறஉளயம், an overflowing. சலப்பிறளயம், a deluge, inundation. அக்கினிப்பிறளயம், a destruction by fire. மனுஷப்பிறளயம், an immense crowd of people. தண்டுபிறளயமாயவருகுது, the army comes in a very large number.

பிறா, புறா, a dove, pigeon. பிறாக்குஞ்சு, young pigeons. காட்டுப்பிறா, a turtle, turtle-dove. மாடப்பிறா, a domestick dove. பச்சைப்பிறா, a greenish pigeon. கவரியம்பிறா, மணிலைப்பிறா, பெரும்பிறா, *other kinds of doves.*

பிறாகாரம், a court or yard of a temple or palace.

பிறாக்கு v. பராக்கு.

பிறாணம் v. பிராணம்.

பிறாச்சித்தம்பண்ணுகிறது, to punish.

பிறாத்தனை v. பிராத்தனை.

பிறாப்பத்தி, one's luck or good fortune.

பிறாயம் v. பிராயம்.

பிறிகிறது, பிறிந்துபோறது, to separate yourself from an other ; to become disjoined or divided in parts or branches. பிறிக்கிறது, பிறியப்பண்ணுகிறது, to separate, disjoin. பிறித்துக்கொள்ளுகிறது, to separate ones self. பிறிவு, a separation ; a section in a book. பிறிவுகாலம், the time of parting. பிறிவினை, a disunion.

பிறிதி v. பிறதி.

பிறிதி v. பிறியம்.

பிறிதிக்கினை, a promise to do a thing ; a purpose of the mind. பிறிதிக்கினைபண்ணுகிறது, to promise ; to propose to yourself.

பிறியம், பிறிதி, dear, beloved, agreeable, charming ; love, affection. பிறியப்படுகிறது, to be pleased with a thing. ஒருத்தன்மேலேபிறியம்வைக்கிறது, to love one. பிறியமாய், with pleasure, out of affection. பிறியத்தனம், favor, benevolence. போசனப்பிறியன், one who loves good victuals. சயனப்பிறியன், one who loves sleep. பிறியவான், a good natured person.

பிறிவினை v. பிறிகிறது.

பிறிவு v. பிறிகிறது.

பிறுமை v. விறுமை.

பிறுமாண்டம் v. விறுமாண்டம்.

பிறேதம், a corpse, dead body. பிறேதலங்காரம்பண்ணுகிறது, to adorn a corpse for funerals.

பிறை, the horned moon, *particularly* after newmoon. முதற்பிறை, the first day after newmoon. ரெண்டாம்பிறை, the second day after it. பிறைகாணுது (புறப்பட்டுது) the horned moon appeares. வளர்பிறை, the crescent. தேய்பிறை, the decrescent.

✦ பிறையாசம், labor, pains, fatigue, endeavor, trouble. பிறையாசப்படுகிறது, to endeavour, to

to trouble yourself, to take pains. பிறையாசி, a laborious man.

பிறையெத்தனம், பிரயத்தனம், any proper way to go to work. பிறையெத்தனப்படுகிறது, பிறையெத்தனம்பண்ணுகிறது, to endeavour. பிறையெத்தனமாய், skilfully, industriously. நாலாப்பிறையெத்தனமாயபார்த்தான், he employed all the skill he had.

✝ பிறையோகம், preparatories towards a work. பிறையோகம்பண்ணுகிறது, to make a disposition or scheme towards a work. யுத்தப்பிறையோகம், preparatories for war. பிறையோகி, a capable man.

✝ பிறையோசனம், profit, advantage, utility. பிறையோசனப்படுகிறது, to prove usefull or profitable. பிறையோசனன், பிறையோசகன், a usefull person.

பிற்காலம், the following time.

பிற்கிறது v. பிகக்கிறது.

பிற்பாடு, afterwards, after.

பிறைநாள், the day after.

பின், பின்பு, after. அதுக்குப்பின், afterwards, after it. அவன்போனபின், after he was gone. பின்கட்டேகொட்டேத்திரிகிறது, பின்கயபுடிகக்கொண்டுபோறது, to hold your hands joined behind your back; to be idle. பின்கட்டுமுறியாயகட்டுகிறது, to tie one's hands behind his back. பின்தட்டு, the hind-part of a ship, the stern. பிற்பக்கம், பிற்புறம், the back side. பின்னடி, hereafter, after this time. பின்னடியார், the posterity, those that will be born in times hereafter. பின்னந்தலை, the hinder-part of the head. பின்னந்தொடை, a hind-quarter *of mutton etc.* பிறகாரியம், the consequence, what will happen hereafter. பின்னுக, behind. பின்னலே, behind; after.

பின்சேலுகிறது, to follow.

பின்தொடருகிறது, to pursue.

பின்பற்றுகிறது, to imitate.

பின்வாஙகிறது, to backslide; to recede *from a promise, purpose, bargain etc.*

✝ பின்னம், பின்னபேதம், பின்னபேதகம், a rupture, difference, disunion, variance. பின்னம் (பின்னபேதகம்) பண்ணுகிறது, to make a difference. கெற்பம்பின்னமாய்போச்சுது, she has miscarried.

பின்னுகிறது, பின்னிப்போடுகிறது, to plait, braid, twist. பின்னல், a plait. பின்னல் சன்னலாயிருக்கிறது, to be intricate. சன்னலபின்னலாயபேசுகிறது, to speak confusedly.

பின்னும், further, besides; hereafter. பின்னுமென்ன, what more? பின்னும்பும், again, moreover, besides.

பீ, பீய், man's dung. பீநாறிமரம், a tree whose blos[som] stinks as man's dung. பீநாறிப்பட்டை the stinking bark *of a certain tree.*

பீக்கிலாயட்டம், பீக்கிலாயபுடியம், a hinderance, a stop made to a business.

பீகக்கு, பீர்க்கு, பீர்க்கங்குசேடி, *the name of a garden-plant.* பீர்க்கங்காய், it's fruit. நுரைப்பீக்கு, *a tender kind of that vegetable.* பேயப்பீக்கு, *a bitter kind of it.*

பீஙகான், porcelain, China-ware.

✝ பீசம், a man's privy parts.

பீச்சாஙகுழல், a syringe.

பீச்சாஙகொள்ளி, a timorous fellow.

பீச்சுகிறது, to squirt, syringe. மருந்தைபவனவாயாலேபீச்சுகிறது, to give one an injection. காக்காயஉயரத்திருந்துபீச்சுது, a crow squirts it's excrements from on high.

பீச்சைக்கை, பீச்சக்கை, the left hand, *reputed by the Indians to be unclean.* பீச்சைக்கத்தி, a blunt sword.

✝ பீடம், an altar; a throne. பீடப்பலகை, a chair or throne. பேலிபீடம், an altar for sacrifice.

பீடிக்கிறது, to vex or torment *as pains do.*

பீடு, honor, greatness, pride.

✝ பீடை, affliction, misery. பீடைபிடித்தவன், a poor man. மனப்பீடை, sorrow.

பீபட்கம், an office.

பீபட்கம், vain swaggering. பீபட்கக்காறன், a bully, braggard, swaggerer. பீபட்கவேலை, a work that appeares good on the outside, but is false within.

பீபுடி, the double breast-part of a garment. உள்பீபுடி, the part of it that is within. மேலபீபுடி, the outward part that covetes the other.

பீபுடிக்கை, tricks.

✝ பீதாம்பரம், yellow silk. பீதவற்னம், gold-color.

பீத்தல், rent, ragged, worn out.

பீத்து, fear, fright, பீத்துப்பிடித்தவன், one that is full of fear.

பீத்துகிறது, to swagger or boast, to make *a thing* great.

பீராஙகி, a gun, cannon. பீராஙகிசுடுகிறது, to fire a cannon. பீராஙகிச்சத்தம் (வெடடு) the report of a gun. பீராஙகிவாய், the muzzle of a gun. பீராஙகிக்காறன், a gunner. பீராஙகித்தடி, a rammer. சபுடிபபீராஙகி. குந்தாணிப்பீராஙகி, a mortar. பீராஙகிவாசல், an embrasure.

பீராயகிறது, பீராயந்து (பீராந்து) போடுகிறது, to remove *little stones or straw from rice etc.*

பீரோடுகிறது, பீரிறஙகிறது, பீருவிழுகிறது, to run forth *as milk runs forth out of the breasts.*

பீர்க்கு, v. பீகக்கு.

பீலி, a ring as women wear on their toes; peacock's feathers; a dice for casting lots. பீலிக்கொடை, an umbrello of peacock's feathers. பீலிபோடுகிறது, to cast lots.

பீளை, the gum of the eyes. பீளைசாறிக்கொண்டிருக்குது, filth gathers in the corner of the eyes.

பீளைப்பூ v. பூளை.

பீறுகிறது, to rend or tear. பீறல், a rent. பீறிப்போறது, to rend by itself. பீறிப்போடுகிறது, to dilacerate or rend to pieces. பீறுண்டுபோகிறது, to be dilacerated or rent to pieces *by wild beasts.*

✝ பீனசம், an ulceration in the head running off thro' the nostrils. நீர்ப்பீனசம், it's running as water. ரெத்தப்பீனசம், it's running with blood. சீராயப்பீனசம், it's coming forth as bran.

புகட்டுகிறது, போட்டுகிறது, போட்டவிடுகிறது, to pour *some thing* into a beast's or child's mouth.

புகழுகிறது, to praise. புகழ், புகழ்ச்சி, praise.

புகாரம், a great smoke.

புகுகிறது (புகுதுகிறது) புதுகிறது,

புகுநதுகொளளுகிறது, பூநது கொள ளுகிறது, to enter, to get in. புகுநது (பூந து) பாரககிறது, to look down into *a hole or into a narrow place*. பொழுதுபூநதுபோகுது, the ſun ſets. பொழுதுபூந, at ſunſet. கடடி புகுநதவள, a widow that married again.

புகுததுகிறது *v.* புகடடுகிறது.

புகை, ſmoke. புகைககிறது, to ſmoke. பு கைககிறது, to ſmoke *ſome thing*. புகைசசல, ſmoking, full of ſmoke; dark, dim. புகைசசல போடுகிறது, to make a ſmoke. புகைககாடு, a great or thick ſmoke. புகையிலை, tabacco. பு கையிலைபபொடி, ſnuff.

புககிறது *v.* புடகிறது.

புககை, a pap of rice-meal.

புஙகு, புஙகமரம, *the name of a tree*.

புசம *v.* புயம.

புசல, பிசல, a plaiſterer's bruſh.

புசல, a ſtorm, *v.* பிசல.

புசசம, a tail.

✚ புஷயராகம, புஷபராகம, a topaze.

✚ புஷபம, a flower.

புஞசை, a field that cannot be watered.

புடம *v.* பீடம.

புடல, *the name of a garden-plant*. புடலங காய, it's fruit, *called* patola. கொததுபபுடல, *an other kind of it*.

புடுககு *v.* பிடுககு.

புடைககிறது, to fan, winnow; to ſwell. பு டைபபு, ſwelling.

புடகிறது *v.* பிடகிறது.

புடடம, the breech, back-ſide.

புடடு, *a kind of* a meal-cake. புடடுககூ டை, *a kind of* baſket.

புடபம *v.* புஷபம.

புணருகிறது, புணரசசிபணணுகிறது, to commit fornication or uncleanneſs. புணரசசி, whoring, fornication.

புஉணாககிறது *v.* பிஉணாககிறது.

புண, an open wound, ulcer. புணணாயிருக கிறது, to be ſore. புணணாககிறது, to make ſore by corroſives.

புணடரீகம, புணடரீககமலம, *the name of a flower*.

புணணாககு, cakes of beaten ſeeds, rape-ſeed-cakes. புணணாககுககீரை, *the name of a plant*.

✚ புணணியம, a good or charitable work. புணணியவான, புணணியசாலி (*fem.* புணணியவதி) a charitable person. புணணி யாததுமா, a virtuous and charitable ſoul.

புதலவர, children.

புதன, Mercury the planet. புதனகிழமை, wedneſday.

புதுசு, புதிது, புதிய, புது, new. புதிய வன, a novice. புதிதாககிறது, to renew. பு துபபணம, new coin. புதுமை, a new or ſtrange thing, a thing unheard of. புதுநாஉணா யம, new.

புதுககிறது *v.* பிதுககிறது.

புதைககிறது, புதைததுபபோடுகிறது, to interr, bury. புதைததுவைககிறது, to hide in the ground. புதைததுககிடககிறது, to lie interred. புதையல, a treaſure hidden in the ground. புதைபொருள, a dark, occult or obſcure ſpeech or writing.

புதகரிசி, new rice.

புததி, underſtanding, intellect, wit, judgement. புத தியுளளவன, புததிமான, a prudent, judicious or ſkilfull man. புததிகெடடவன, a dull, unwiſe or fooliſh one. புததிககூரமை, acuteneſs. புததிசொலலுகிறது, to admoniſh, exhort. புத தி, புததிமதி an admonition, a doctrine. புததிகறபிக கிறது, to inſtruct. புததிததாடசி, imprudence. புத தியயககம, foolery, waggiſhneſs, ſillineſs.

✚ புததிரன, a ſon. புததிரர, the ſons or deſcendants. புததிரி, a daughter. புததிரசந தானம, புததிரசமபதது, the iſsue, offſpring, progeny. புததிராதிகள, a large offſpring.

புறறு, white ant-hills. புறறாசசோறு, the work of the white ants within the holes. புறறு மணா, a heap of earth made by white ants. புற றுபபுறறாயபுறபபடுகிறது, to be ſcurfy or full of ſcabs.

புததுருககுநெய, butter newly melted.

புயம, புசம, the arm. புயபெலம, ſtrength in the arms.

புரசுமரம, *the name of a tree*.

புரடடாசி, புரடடாதி, ſeptember.

புரம, புரி, a city.

புரவி, a horſe.

புராணம, acts of ancient times, hiſtory-books.

புரி *v.* புரம.

புரிகிறது, புரிநதருளுகிறது, to beſtow. தயைபுரிகிறது, to beſtow a favor, to be gracious.

✚ புரிசம, புரியம, ſcarce, dear. புரிசப படுகிறது, to grow dear.

புரிசம, dear, acceptable *v.* பிரியம.

✚ புரிசாலமபிடிககிறது, to beg inſtantly.

புருஷராகம *v.* புஷயராகம.

✚ புருஷன, a huſband; a manly perſon. புரு ஷாயிதது, a man's age.

புருவம, the eye-brows. புருவமெததுக கிறது, to ſhave the eye-brows ſo that they grow ſmaller. புருவததைநெறிககிறது, to frown, to grow angry.

புருவையாடு, a ſheep ſtill young.

புரை, a ſeparation in a bag etc; a deep ulcer, a fiſtula; a hole all along ſome thing. புரையேற றது, ſome thing is fallen into the windpipe and comes up to the noſtrils by caugh. புரையோடுது, it is a deep ulcer, a fiſtula.

புரைகிறது *v.* தோல.

✚ புரோகிதர, prieſts.

புலம, a corn-field.

புலமபுகிறது, to lament. புலமபல, lamentation.

புலருகிறது, புலரநதுபோகிறது, to grow dry.

புலவர, poets, learned men.

புலன புலம, a ſenſe. ஐமபுலன, the five ſenſes. புலனகளஐயிநது, ſenſes are five.

புலால *v.* பிலால.

புலி, a tyger. புலிககுடடி, a young tyger. புலிததோல, a tyger's ſkin. புலிநகம, tyger-claws. புலிபாயகிறது, to fly at one like a tyger. சிறுததைபபுலி, a tyger ſpeckled with ſmall ſpots. வெஙகபபுலி, பெருமபுலி, the larger tyger, whoſe ſkin is ſtreaked. கொடிபபுலி, a ſmaller kind of tygers.

✚ புலிஙகம, the maſculine gender.

புலை, wickedneſs, evil.

புலையர, *people of a certain low tribe*].

புல *v.* புலறு.

புலலன, புலலறிவாளன, an unmannerly

merly and inept fellow.

புல்லு, பில்லு, புல், grass. புல்லறுக்கிறது (வெட்டுகிறது) to cut grass. புல்லுச்செதுக்குகிறது, to thrust the grass away for cleaning the ground. புல்லுக்கட்டு, a truss of grass. புல்வாடல், a dejected face. புல்லாங்குழல், a reed-pipe. புல்லோலி, புல்லுருவி, the name of a plant growing on trees. நல்லமரத்திலேபுல்லோலிபாய்ச்சுது, he is a degenerated son of honest parents. புல்வரி, tribute for pasturage. கற்பூரப்புல்லு, நாற்றம்புல்லு, lemon-grass.

புல்வாய், புல்வா, a *kind of* hart.

* புவனம், the earth. புவனசக்கிறம், *the name of* a geography.

* புவி, the earth.

புழங்கிறது, to converse with one another.

புழிகிறது, புழிந்துபோடுகிறது, to wring or squeeze out.

புழு, a worm, a mite. பச்சைப்புழு, a caterpillar. புழுக்கொத்தி, *the name of a bird*. புழுவெட்டு, a sickness that makes the hair fall. புழுக்கிறது, புழுத்துப்போகிறது. to grow wormy or putrid. புழுத்துநெளிகிறது, to be full of worms, to crawl with worms. புழுப்புழுத்துச்செத்தான், he died being eaten of worms.

புழுகு, musk. புழுகுப்பிள்ளை, புழுகுப்பூனை, a musk-cat. புழுகுச்சட்டம், the ventricle in the musk-cat, where the musk is generated. புழுகுச்சம்பா, *a kind of* paddy.

புழுக்கம், the closeness of a room, the want of air. புழுக்கத்திலேவைக்கிறது, to shut *one* up in a close room, where no air comes to.

புழுக்கை, a slave; the treadles or crottles *of goats, sheep, rats etc.*

புழுங்கலரிசி, rice whereof the paddy before beating has been a littled boiled.

புழுதி, dust of the ground. கால்புழுதியடைந்தது, the feet are grown dusty. பாத்திவிரைப்புழுதியாச்சுது, the garden-bed is well prepared for receiving the seed. புழுதிஈடுக்கிறது, to plough the field the last time.

புழுவு v. புழு.

புளகு v. பிளக்கிறது, பிளகு.

புளகிக்கிறது, புளகிதமாயிருக்கிறது, to be mad for joy or voluptuousness.

புளி, பிளி, tamarind. புளியமரம். a tamarind-tree. புளியங்காய், unripe tamarind. புளியங்கொட்டை, tamarind-stones. புளியங்கொட்டைப்பசை, tamarind-paste. புளிக்கரைக்கிறது, to dilute tamarind. புளிகுடித்தாள், she has been deliverd of a child. (*properly, she has drunk a sour thing.*) புளிமாங்காய், *the fruit called* bilimby.

புளிக்கிறது, பிளிக்கிறது, பிளித்திருக்கிறது. to be sour. புளித்தக்கீரை, sorrel. புளிக்கவைக்கிறது, to keep for leaven. புளித்தமா, leaven. புளிப்பு, sour. புளிக்கறி, a sour dish.

புளுகிறது, to ly impudently. புளுகன், one that speaks many a lie. புளுகு, a lie.

புள்ளி, a spot; a point or tittle. புள்ளிமான், a spotted deer or hart. புள்ளிப்பட்டது, புள்ளிபுள்ளியாயிருக்கிறது, spotted, speckled. புள்ளிபார்க்கிறது, to conjecture how much the sum may be, to estimate. புள்ளிபோடுகிறது, to make a point or tittle; to note down the several articles.

புள்ளு, birds; a little piece of wood wherewith children play as if it were a bird. புள்ளடி, the tracks of birds in sand; a mark in the margin of a book. சிறுபுள்ளடி, *the name of a creeping plant*.

புறணி, calumny. v போறணி.

புறணி, மேல்புறணி, the tender rind or coat that covers the bark of a tree.

புறண்டுகிறது v. பறண்டுகிறது.

புறத்தே, without, outwards.

புறத்தேகம் v. பிறத்தியேகம்.

புறத்தி, புறத்தியிலே, outward, abroad, elsewhere. புறத்தியார், புறத்திமனுஷர், others that do not belong to our family. பிறத்தியமாய், separately. புறத்திப்படுகிறது, to become a separate thing. பிறத்தியமாய்ப்போகிறது, to become separate; to go to other places. புறத்திப்படுத்திவைக்கிறது, to lay *a thing* separately by itself.

புறப்படுகிறது, to go out, to go farther; to come forth. புறப்பட்டுப்போகிறது, to go away.

புறம், பிறம், the side of a thing; the outside; a tract or part of a country. முன்புறம், the front, fore-side. பின்புறம், the back-side. உள்புறம், the inside. வெளிப்புறம், the outside. வலப்புறமாக, to the right hand. இட (இடது) புறமாக, to the left hand. பிறத்துக்குஐந்து, on every side five. உள்ளும்புறமுமாய், within and without. புறங்கால், the upper part of the foot. புறங்கை, the back of the hand. புறங்கூறுகிறது, to blab out things that passed within doors. புறச்சீமை, புறதேசம், a foreign country. புறதாரம், புறமனையாள், an other man's wife. புறர், others, strangers. புறவடை, field given to other people to till. புறமுகம்பார்த்தவள், an adulteress. பிள்ளைபுறஞ்செக்குது, the child is come to the birth. புறவயிரம், a tree whose outside is harder than the inside, *as a palmyra-tree is*. நாட்டுப்புறம், the inland country. சுத்துப்புறம், to country round about.

புறம்பு, புறம்பே, புறம்பாய், abroad, without, out of doors. புறம்பாய்க்கொடுக்கிறது, to lend *money* to other people. புறம்பாக்குகிறது, to exclude.

புறவகுசியம் v. பிறவகுசியம்.

புறா, புறவு v. பிறா.

புறேணி v. போறணி.

புறகை v. புகை.

புற்று v. புத்து.

புனரித்தண்டு, *the name of a plant*.

புனல், water; a river. புனலி, *the name of a water-plant*.

புனைகிறது, to dress, adorn.

புன்சிரிப்பு, புன்னகை, a smiling. புன்சிரிப்புக்கொள்ளுகிறது, புன்சிரிப்பாய்ச்சிரிக்கிறது, to smile or simper.

புன்னை, புன்னைமரம், *the name of a tree*. புன்னையெண்ணெய், oil of the kernels of that tree.

பூ, a flower. பூப்பொட்டளம், பூச்செண்டு, a nose-gay. பூக்குஞ்சு, an unfledged young ckicken, pigeon etc. பூங்காவனம், பூங்கா, a flower-garden. பூஞ்சட்டை, blooming ears of corn. பூத்தொடுக்கிறது, to string flowers. பூமாலை, a garland of flowers.

பூக்கிறது, பூப்பூக்கிறது, to bloom, blow or blossom. மரம்பூப்பூக்குது, the tree is in blossom. அதுபூத்துப்போச்சுது, it is past blossoming. நெருப்புப்பூத்துப்போச்சுது the fire is past burning. பூசணம்பூத்துப்போறது, to mould, to grow mouldy or hoary. கண்பூத்துப்போச்சுது, a speck is grown in the eye.

பூசணி, பூசணிக்காய், a gourd, pomkin. சக்கரைப்பூசணி, *the common sort of pomkins.* கலியாணப்பூசணி, சாம்பற்பூசணி, *another kind*, ash-colored.

பூசல், a battle; a boisterous noise as of a battle.

* பூசாரி, an idolatrous sacrificer in a little pagoda; an exorcist.

பூசிக்கிறது, to sacrifice, to perform the cerimonies before an idol.

பூசுகிறது, to smear, besmear, dawb, anoint.

பூசை, an offering or sacrifice to idols. பூசைபண்ணுகிறது, to sacrifice, to serve the idol. பூசிதனுக்கிறது, to be worshipped.

பூசக்கரம், the whole globe of the earth.

* பூச்சி, an insect. பிள்ளைகளைப்பூச்சிகாட்டுகிறது, to scare or fright children.

* பூச்சியம், neatness, rareness. பூச்சியமாய்வைத்துக்கொள்ளுகிறது, to keep *a thing* with veneration. பூச்சியக்கொலைச்சல், an impolite treatment. பூச்சியமாய்ப்போறது, to be of no advantage. ஏருபூச்சியமாய்த்திரிகிறது, to be poor. சாப்பாட்டுக்குப்பூச்சியமாயிருக்குது, I have nothing to live upon. வேலைபூச்சியம், cessation of work.

பூச்சு, the matter wherewith any thing is gilt, silvered or tinned over; weavers starch. பொற்பூச்சு, gilding. பூச்சுப்பிடவை, linnen stiftened with starch or consthy. மேற்பூச்சு, the outward crust or plaister of a thing.

* பூஷணம், பூஷணங்கள், jewels.

பூஞ்சு, பூஞ்சை, mouldiness and other nastiness. பூஞ்சுபிடித்தவன், one who is coverd with dust and nastiness. பூஞ்சையாய்த்திரிகிறது, to make a poor appearance. பூஞ்சைநிலம், a barren ground.

பூடு, a shrub, plant.

பூட்டன், the grandfather's father.

பூட்டு, a lock; the closure of a thing. பூட்டுகிறது, பூட்டிப்போடுகிறது (வைக்கிறது), to lock or shut, to shut up; to fasten. பூட்டியிருக்குது (கிடக்குது) it is lockt up. குதிரைகளைரதத்திலேபூட்டுகிறது, to put the horses to the coach. பூட்டாங்கயிறு, the string by which oxen are tied to the yoke.

பூணுகிறது, பூண்கொள்ளுகிறது, பூண்டுகொள்ளுகிறது, to put on *jewels etc.* காரியத்தைப்பூணாமல் (பூண்கொள்ளாமல்) போறது, not to ingage in a business. பூணுநூல், the string which Braminees and some other tribes wear over their shoulder like a sash.

பூண், a ring or ferrel.

பூண்டி, a village.

பூண்டு, a plant.

பூதகாலம், the time past.

* பூதம், a spectre, ghost, apparition; ill luck deriving from the devil. பூதகணம், a host of devils. பூதபிசாசு, the devil. பூதக்கால், a leg swell'd very big by a disorder.

* பூதலம், the earth.

* பூதியம், an element. பஞ்சபூதியம், five elements, *earth, water, fire, air, ethereal matter.*

பூதுக்கிறது *v.* புகுக்கிறது.

பூத்துப்பூத்தென்றிரைக்கிறது, to have run one's self out of breath, to pant, to puff and blow.

பூந்து *v.* புகுக்கிறது.

பூப்பு, womens monthly terms.

* பூமான், a husband.

பூமி, the earth. பூமியின்கண்ணிலே, on the surface of the earth.

பூரசு, பூவரசு *v.* அரசு.

* பூரணம், பூர்ணம், abundance, plenty. பூரணசந்திரன், the full moon. பூரணசந்தோஷம், a great joy. பூரணபலன், a full reward.

பூரம் *v.* பூரான்.

பூராயம், attentiveness, prudence. பூராயக்காரன், a very attentive and prudent person. பூராயம்பிடிக்கிறது, to be attentive and considerate.

பூரான், செவிப்பூரான், a centopee. செம்பூரான், a red centopee. கரும்பூரான், a black one. சலங்கைப்பூரான், a centopee of the largest species.

பூரிக்கிறது, பூரித்திருக்கிறது, to be filled with joy. பூரிப்பு, a great joy.

பூரிகை, a trump, trumpet. பூரிகையூதுகிறது, to sound or blow a trumpet.

பூரியர், wicked people.

பூருவம் *v.* பூர்வம்.

பூரையாய்ப்போறது, பூரையென்றுபோறது, to come to nought. பூரை, a meer nothing. பூரையாக்கிப்போடுகிறது, to undo a thing, to bring it to nought.

பூர்க்கிறது *v.* பூக்கிறது.

பூலா, *the name of a tree, the bark of which is used to die red.* வற்பூலா, நீர்ப்பூலா, பகழ்ப்பூலா, *other kinds of it.*

* பூலோகம், the earth, the world.

பூவந்தி, *the name of a tree.* பூவந்திப்பழம், பூவம்பழம், பொன்னும்பழம், it's fruit, *fit for taking out spots, and the filth of the hair.*

பூவரசு *v.* அரசு.

பூளை *v.* பீளை.

பூளை, *the name of a plant.* பூளைப்பூ, பூளைப்பஞ்சு, it's wolly flower, *which people use to stuff pillows with.* கோடிப்பூளை, உளரிப்பூளை, வயல்ப்பூளை, *different kinds of that plant.*

பூர்ணம் *v.* பூரணம்.

பூறுக்கிறது *v.* பீறுக்கிறது.

பூர்வபட்சம், the half month after the new moon.

பூர்வம், பூர்வகாலம், பூர்வீகம், old times, ancient ages, antiquity. பூர்வத்திலே, in old times. பூர்வத்துமனுஷன், an old man who knowes things of former days. பூர்வோத்திரம், the whole of circumstances from old time down. பூர்வீகன், the founder of a thing. பூர்வப்பிடிருக்கிறது, பூர்வம்பிடித்திருக்கிறது, to be grown mouldy.

பூர்வம், மனப்பூர்வம், willingness, readiness. மனப்பூர்வமாய், willingly, readily, gladly.

பூநாகம், worms in the ground.

பூனை, a cat. பூனைக்குட்டி, a kitten. பூனைக்கண்ணன், one whose eyes are like cats eyes. கடுவன்பூனை, the male of cats, a boar-cat. பூனைஉறுமுகுது, the cat purreth. காட்டுப்பூனை, a wild cat. பூனைமயிர், பூனைக்

காலி, பூணைமடி, பூணைக்கச்சி, *names of herbs*.
பெட்டகம், a little chest, box.
பெட்டி, a chest.
பெட்டு v. பொட்டு.
பெட்டை, the female of birds; the female of some quadrupedes. பெட்டைக்கோழி, a hen. பெட்டைப்புறா, a dove, hen-pigeon. பெட்டைநாய், a bitch. பெட்டைப்பூணை, a cat, the female of cats. பெட்டைமான், a hind, the female of a dear. பெட்டைப்பன்றி, a sow, the female of a hog. பெட்டையாடு, a sheep, a she-goat. பெட்டையன், a hermaphrodite. பெட்டைமாறி, a cuckold.
பெண், a maid or virgin; the female of quadrupedes and birds. பெண்கொள்ளுகிறது, to marry, to take a wife. பெண்குறி, the mark of the femal sex. பெண்சாதி, பெண்டாட்டி, a woman. பெண்டு, பெண்ணுயிர்ப்பிறந்தவள், a woman. பெண்சாதிகள், பெண்டுகள். women. பெண்ணரசி, a woman that reignes over a kingdom; a choice woman. பெண்ணரசுநாடு, a country govern'd by a woman. பெண்பால், the feminine gender. பெண்பிள்ளை, a femal child; a woman. பெண்ணளி, a woman given to lies and quarrels. பெண்ணாணன், a womanish fellow. பெண்மரம், the feminine of a tree.
பெத்தரிக்கம், haughtiness, pride.
பெந்து, பந்து, பந்துக்கட்டு, kinred. பெந்துக்கள், பெந்துசனங்கள், kinsfolks, relations. பந்துக்கட்டு, an alliance or affinity by marriage. பந்துத்துரோகம், a trick served on your relations.
பெயருகிறது v. பெருகிறது.
பெயர், the nominative. பெயரெச்சம், a participle.
பெய்கிறது, to rain. மழைபெய்யுது, it rains. பனிபெய்யுது, a dew fall's. சலநீர் பெய்கிறது, to make water.
பெரிசு, பெரிது, பெரியது, great. பெரியவன் (*fem.* பெரியவள்) an adult person, a person of age. பெரியவர், a great person. பெரியார், பெரியோர், பெரியோர்கள், great ones, superiors; elders, ancestors. பெரியப்பன், பெரியத்தப்பன், the father's elder brother. பெரியாத்தாள், பெரியதாய், பெரியாய், the mother's elder sister; the wife of the fathers elder brother. பெரியத்தை, the father's elder sister. பெரியமமான், the mother's elder brother, பெரியதனம், a dignity, a surveyorship. பெரியதனம்பண்ணுகிறது, to govern. பெரியதனக்காறன், a surveyor, head-man. பெரியதுரை, a governor, chief.
பெரியாநங்கை, *the name of a medicinal plant*.
பெருகிறது, to increase; to grow great. பெருக, abundantly. பெருவிரல், the thumb. பெருநாள், a holy day. பெருவாரிக்காச்சல், a pest, plague, epidemical mortality. பெருவாரிக்காச்சல்புடிக்குது, the country is infected with the plague. பெரும்பாடுள்ளவள், a woman affected with an immoderate bloody flux. பெரும்பாடுறது, her flux is immoderate. பெருங்காயம், asa fetida. கறிபெருங்காயம் *ditto*, such as is used in carry or sauce. ஆணைப்பெருங்காயம், ஆணைக்காயம், *ditto* such as is used as physick for elephants etc. பெருநெருப்பு, a great fire. பெருமூச்சு, a deep fetched breath; a sigh. பெருமூச்சுவிடுகிறது, to sigh. பெருமூச்சுக்கொள்ளுகிறது, to fetch your breath deep.
பெருக்கம், what is multiplied or numerous. பெருக்கக்கணக்கு, multiplication in arithmetick. பெருக்கிறது (பெருக்குகிறது) to multiply. மூன்றாறுக்கப்பெருக்கப்பதினெட்டாகும், three times six is eighteen. பெருக்கிப்போடுகிறது, to sweep. தலையுங்கடையும்பெருக்கி நடுவுக்கீயுகிறது, to reckon by the rule of three.
பெருக்கு, an overflowing; the flood of the sea.
பெருச்சாளி, பெர்ச்சாளி, a large kind of rat, a penticot.
பெருப்பம், பெருமம், thickness.
பெருமை, greatness; pride. பெருமைபண்ணுகிறது, to carry it high. பெருமைக்காறன், a proud man. அதுஉனக்குப்பெருமையல்ல, that is not a thing for you to glory of. பெருமைபேசுகிறது (பாராட்டுகிறது) to boast, vaunt, talk big.
பெலக்கிறது, பெலத்துக்கொள்ளுகிறது, to grow strong, to gather strength. பெலத்துப்பிடிக்கிறது, to lay strongly hold of a thing, to hold fast. பெலத்தடிக்கிறது, to strike hard. பெலக்கப்பண்ணுகிறது, to strengthen.
பெலத்துவாரம், a mine of metal. பெலத்துவாரத்திலேபோறது, to mine, to work in mines.
* பெலம், பெலன், strength, force, might. பெலக்கேடு, பெலயீனம், பெலட்சயம். weakness, disability, impotence. பெலசாலி, பெலவான், பெலேந்திரன், a strenuous, brave or valiant person. பெலன்கொள்ளுகிறது, to gather strength. பெலன்செய்கிற மருந்து, a physick that workes well. பெலன்செய்கிறமரம், a tree that thrives well. பெலப்படி, strength, assistance. பெலப்படுகிறது, to grow strong. பெலப்படுத்துகிறது, to strengthen, corroborate. பெலக்காரம், violence. பெலவந்தம் (பெலக்காரம்) பண்ணுகிறது, to offer violence *to one*. பெலவந்தமாய், பெலவந்தத்தினபேரிலே, violently.
பெலி, a sacrifice. பெலிகொடுக்கிறது (இடுகிறது, செலுத்துகிறது) to sacrifice, to bring a sacrifice.
பெறுகிறது, to get, obtain or gain; to beget, breed, bear; to be worth. வரம்பெற்றவன், one who has received a gift. பெற்றவன், the father. பெற்றோர், the parents. பெற்றோர்பிறந்தார், parents and children. ஆண்பிள்ளையைப்பெற்றாள், she has brought forth a male-child. அவள்பெற்றபிள்ளை, her own child. பெற்றதாய், the very mother. எத்தனை பெறும், how much is it worth? ஒருகாசுபெறாதவேலை, a work that is not worth a cas. விலையேறப்பெற்றது, precious, costly, of a great value.
பேசுகிறது, to speak. பேசிக்கொள்ளுகிறது, பேசிக்கொண்டிருக்கிறது, to speak with one, to talk together. பேசாதே, be silent, hold your peace! பேசாமல்போறது, to go silently away.
பேச்சு, a speech, talk; a rumor. பேச்சுப்பிடுங்குகிறது, to fish secrets out of a person. பேச்சுக்காறன், a talkative; one that deliveres well a speech.

பேச

பேச்சுக்குத்தம், a failing in the ſpeech. அவர்களுக்குள்ளே பேச்சு வார்த்தையில்லை, they don't ſpeak with one another. பேச்சோடுத்துணா, one that ſpeaks in your behalf. பேச்சோடுத்துணாக்கிருக்கிறது, to ſecond one's words. பேச்சுப்பிறக்குது, a rumor or whiſpering is ſpread. பேச்சுநடக்குது, a report goes abroad.

பேடி, a hermaphrodite.

பேடு, the hen of birds. பேடுமூஞ்சி, a womaniſh face.

பேட்டி, the waiting upon a great perſon. பேட்டிகொடுக்கிறது, to wait upon a great one with preſents. பேட்டிபண்ணிக்கொள்ளுகிறது, to ſeek the favor of a great one. பேட்டியாக்கிறது (பண்ணிவிக்கிறது) to procure one the acceſs to a great perſon. துரையைப்பேட்டிகண்டேன், பேட்டியாச்சுது, I have had an acceſs to the governor or gentleman.

பேட்டை, a ſuburb, a pettah near a town.

பேணுகிறது, பேணிக்கொள்ளுகிறது, to honour, reſpect; to take care of, to nouriſh, cheriſh. பேணிவளர்க்கிறது, to educate with a great love and care.

✦ பேதகம், பேதம், a disjoining, difference, diſharmony. பேதகம்பண்ணுகிறது, to make a difference or diviſion. பேதாபேதகமாயிருக்கிறது, to be very much diſunited from one another.

பேதமை, ſimplicity.

✦ பேதலிக்கிறது, மனம்பேதலிக்கிறது, to grow diſmayed or diſcouraged. பேதலிக்கப்பண்ணுகிறது, to diſcourage.

✦ பேதி, ſtools. பேதிக்குக்கொடுக்கிறது, to give a purgative medicine.

பேதிக்கிறது, வயறுபேதிக்கிறது, to be a purging, to have ſtools. பேதிக்கவாங்கிறது, to take a purge. காரியம்பேதித்துப்போச்சுது, the thing is altered. ஒருத்தனைப்பேதித்துக்கேட்கிறது, to aſk one many things.

பேதை, பேதைமனுஷன், a ſimple or ſleepiſh perſon. பேதைகள், the ſimple ſort of people.

பேத்தி, பேத்திப்பெண், a grand-daughter; a ſiſter's grand-daughter. பேத்திமார், grand-daughters.

பேத்துகிறது, to ſpeak like one out of wit, to delirate.

பேய், the devil; *joined to plants or other things, ſignifies* wild, bad. பேய்ப்பிடித்தவன், one that is poſſeſſed by an evil ſpirit. பேய்க்கோலங்கொள்ளுகிறது, to take the devil's ſhape, to look miſerable. பேயன், a mad man. பேய்நாய், a mad dog. பேய்க்குதிரை, an intractable horſe. பேய்க்கரும்பு, wild ſugar-reed. பேய்ச்சொறை v. சொறை. பேய்மிரட்டி, a medicinal herb uſed when children have convulſions. பேயுள்ளி, wild onions.

பேரன், பேரப்பிள்ளை, a grand-ſon; a ſiſters grand-ſon.

பேராந்தை, a large owl.

பேரிகை, a large drum. ரணபேரிகை, a kettle-drum.

பேரின்பம் v. இன்பம்.

பேரீச்சு, பேரீஞ்சு, பேரீந்து, a date-tree, palm-tree. பேரீச்சம்பழம், dates.

பேருகிறது, பேர்ந்து (பேந்து) போறது, to be removed from a place; to be rooted out, to grow looſe, to come off. அதுபோராது, it wont come off, it ſticks too faſt. பேர்ந்திரு, make way, give way, ſtand aſide! பேர்த்தெழுதுகிறது, to copy, to tranſcribe a writ. தண்டுபேர்ந்துபோச்சுது, the army has decamped. காத்துப்பேர்ந்துபோச்சுது, the wind has ſhifted.

பேர், a name; a perſon. பேரிடுகிறது, to name. பேர்தரிப்பிக்கிறது, to give a name *to a place*. பேர்போனவன், பேர்பெற்றவன், a famous one. பேர்விளங்க, for to be cried up or praiſed. பேர்ப்பேராக, ſingly, one by one, nominally. பேர்பாதியாய், at two equal ſhares. ஒருத்தனுடையபேரையெடுக்கிறது, to mention one. கள்ளனென்றுபேரெடுத்தான் (பேர்பட்டான்) his name is up for a rogue. பேர்க்கணக்கு, diviſion in arithmetick. நாலுபேரறிய, publickly. அந்தப்பேருக்கு, under that name, color or pretence. ஒருசொல்பலபேரிலேவரும், one word has ſeveral ſignifications. நிந்தைப்பேர், a bad nick-name. ஒருத்தன்பேரிலேப்பிரியமாயிருக்கிறது, to like one. ஒருத்தன்பேரிலேகுத்தஞ்சாட்டுகிறது, to put fault upon one. ஏதின்பேரிலேசண்டைபண்ணுகிறார்கள், what are they quarreling about?

பேர்க்கிறது, பேர்த்துப்போடுகிறது, to pull, force or root a thing out. பேர்த்துவைக்கிறது, to pull out and ſet in an other place; to tranſplant. வெள்ளம்வீட்டைப்பேர்த்தடித்தது, the inundation has ruined the houſe.

பேறுகிறது, to cack.

பேழை, பேழைப்பெட்டி, a cheſt.

பேறு, a thing obtained; child-bearing, delivery of a child. பேறுபெறுகிறது, to obtain a dignity; to obtain bliſs. பேறுகாலம், a woman's time of delivery. பேறுசெல்லாமல்பெற்றாள், ſhe has been deliverd before her time. பேறண்டையாயிருக்குது, her time of delivery is near.

பேற்றுகிறது v. பேத்துகிறது.

பேன், a louſe. பேன்பார்க்கிறது, to louſe.

பை, பைய், a bag, purſe.

பைகோவு, the kingdom of Pegoo.

பைங்கிளி, a parrot of divers colors.

பைசார், ſlippers.

பைத்துப்பத்து, ten times ten. பைத்தொன்பது, ten times nine.

பைத்தியம் v. பயித்தியம்.

பையடை, that part of a woman's cloth that covers the breaſt and the ſhoulders.

பையல் v. பயல்.

பையப்பைய, ſlowly, ſoftly.

போக்கணம், a beggar's bag.

போக்கவாயன் (போக்கவாச்சி) one that has ſhed ſome teeth.

✦ போக்கிஷம், a treaſure. போக்கிஷக்காறன், a treaſurer.

போங்கம், equal, accurate, apt, regular. போங்கம்பண்ணுகிறது, to adapt. போங்கமாய்ப்படிந்தது, well paved or well ſet.

போங்காரம், ſadneſs which preſſes tears out of one's eyes. போங்காரமாய்ச்சொல்லுகிறது, to tell weepingly.

போங்கிறது, to boil faſt, to bubble up; to be a working or raging as the ſea does; to ferment. போங்கல், boiling, bubbling up.

போசிக்கிறது, போசிந்துபோறது, to ſpring forth, or run, little and little; to ſoke through, run through. தண்ணீர்க்குடம்போசியுது, the water-pot ſokes. தண்ணீர்சாடியிலே

போசி

பொசியுது, the water ſokes through the waterveſſel.

பொசிக்கிறது, to eat. பொசித்துப்போடுகிறது, to conſume. பொசிப்பு, meat, food. பொசிப்பாளி, one that by fate and not by law gets the benefit of a thing.

பொசுக்கிறது, பொசுக்கிப்போடுகிறது, to ſinge, ſcorch, ſear or parch *ſomething*.

பொசுங்குகிறது, to be congruent, well placed or ſet; to be ſinged. பொசுங்குணக்கிறது, to come to a proper way. இருவருக்கும்பொசுங்காது. they do not agree together. அவனைப்பொசுங்கப்பார், ſee how to bring him to an agreement.

பொச்சாப்பொலிருக்கிறது, to be ſoft. பொச்சாப்பொலெவைக்கிறது, to place *a thing* ſoftly.

பொச்சாலிநெல்லு, *a kind of* paddy.

பொச்சை, inſects; a harbour of inſects. பொச்சையிலெகையிடாதே, don't put your hand in a harbour of vermin. பொச்சைவந்துசேரும், பொச்சையுடையப்போகுது, inſects will harbour there.

பொச்சைவயறு, a large belly. பொச்சைவயறன், a paunch-bellied man. அவனுக்குப்பொச்சையிட்டுது, he is grown paunch-bellied.

✦ பொஸ்தகம், a book.

பொஸ்தக்காய், poppy-heads, poppy-tops.

பொடி, ſmall, little, minute; powder. பொடியாக்கிறது, to pulverize, reduce to powder. பொடியெழுத்து, ſmall letters. பொடிபோட்டுக்கிறது, to ſolder. பொடித்தூவுகிறது, to ſprinkle *meat with flower, bruiſed ſpices etc*. பொடிமீன், little fiſhes. பொடிப்பிள்ளை, a little child. பொடிபொடியாய்ப்போகிறது, to go all to ſmall pieces. பொடிசு, ſmall, little. பொடிவெட்டி, a kind of ciſars.

பொடுகு, பொடு, சிராய்பொடுகு, ſcall on the head.

பொடுகு, *the name of a plant*.

பொடுதலை, *the name of a plant*.

பொட்டணம், fomenting medicines made together in a bag for clapping on ſome part of the body. சன்னிப்பொட்டணமொத்திடுகிறது, to apply a fomentation in convulſions.

பொட்டிலுப்பு *v.* வெடியுப்பு, ſaltpeter.

பொட்டு, a ſpot of ſandal-powder or other ſtuff put on the forehead; a round gold-plate, the matrimonial ſign of Gentoo-women. பொட்டிடுகிறது, to paint a ſpot on the fore-head. ஒருபொட்டாயிரும், make a grave appearance! பொட்டுமெபொடியுமானமீன், very little fiſhes.

பொட்டு, a moth; chaff, void grains.

பொட்டென, quickly.

பொட்டை, பொட்டைக்கண்ணன், பொட்டையன் (*fem.* பொட்டைச்சி) one that ſquints.

பொதர், a thicket of buſhes. பொதருக்குள்ளேபூந்துகொள்ளுகிறது, to ſlip into a thicket of buſhes.

பொதி, ſacks carried by bullocks. பொதிமாடு, bullocks for carrying ſacks.

பொது, பொதுகாரியம், பொதுவானது, பொதுவிலேயிருக்கிறது, what is of common uſe, or common to more than one; univerſal. சாகிறதெல்லாருக்கும்பொது, death is common to all. பொதுமனுஷன், a perſon who is neither of the one nor of the other party. எல்லாநோய்க்கும்பொதுமருந்து, a phyſick for all diſeaſes. பொதுநிலம், the common, common paſture for the cattle of the town. பொதுகட்டுகிறது (கட்டிவைக்கிறது) to ſequeſtrate, to ſeparate from the poſſeſſion of both parties. பொதுவிலேயெடுத்துச்செலவழிக்கிறது, to ſpend out of the common ſtock. பொதுவிலேசொல்லுகிறது, to ſay or reproach without naming any body. பொதுமையாய், univerſally.

பொத்தலை *v.* கையாந்தகரை.

பொத்தல், rent, ragged. பொத்தலடைக்கிறது, to mend, patch up; to pay off debts.

பொத்தாறு, பொத்தாறுக்கட்டை, the part of a plough where the tail is faſtened to.

பொத்தி, பொத்தித்தாணம், the cods-purſe.

பொத்தநார், ſilk-like hemp.

பொத்துக்கட்டுகிறது, to hide. எத்தனைநாளைக்குப்பொத்துக்கட்டிவைத்துக்கொண்டிருப்பாய், how long wilſt thou hide the thing?

பொத்துகிறது, பொத்திப்போடுகிறது, to mend, patch up; to cover. பொத்திக்கொள்ளுகிறது, to cover one's ſelf. வாய்பொத்துகிறது, to cover your mouth with your hand. அவனைப்பொத்திவிட்டார்கள், they have beaten him ſoundly.

பொத்துப்பொத்தென்றுவிழுகிறது, to fall with a noiſe *as fruits from a tree*.

பொத்தை *v.* பிலாசை.

பொந்தா, *the name of a water-bird*.

பொந்தி, the body.

பொந்து, a cave or hole. மரப்பொந்து, a hole in a tree.

பொந்தையக்கோல், *a kind of* ſtaff.

பொம்மனாதிம்மன், ſuch and ſuch a one, a certain perſon; one that is maſked.

பொம்மை, a puppet; a breaſt-work, parapet.

பொய், a lie, falſehood, untruth. பொய்க்கால், a ſtilt. பொய்க்குழி, a pit-fall. பொய்த்தலை, a mock-head. பொய்சொல்லுகிறது (பேசுகிறது) to lie, tell lies. பொய்யாணை, a falſe oath. பொய்ச்சாட்சி, a falſe witneſs. பொய்வாழ்வு, the vain delight of the world. பொய்விசேஷம், a falſe ſtory. பொய்யாய்ப்போனநம்பிக்கை, a falſe hope, vain hope. பொய்யாய்ப்போகிறது, to prove falſe. பொய்யன், a liar.

பொய்கை, a deep pool of water.

பொய்க்கிறது, பொய்த்துப்போகிறது, to prove falſe. பொய்யாதே, don't lie. என்வார்த்தைபொய்யாது, my word will not prove falſe.

பொரி, what is parched or toſted. நெற்பொரி, parched paddy. பொரிக்கறி, a fried meſs. பொரிவிளாங்காய், *a kind of* fritters. பொரிப்பொரிக்கிறது, to parch *ſomething*. பொரிப்பொரிக்கப்பொலேபேசுகிறது, to ſpeak precipitantly. பொரிவாணம், a rocket which caſtes ſparks. பொரிப்பூண்டு, பொரிப்பொரிச்சான், *names of plants*.

பொரிகிறது, to be parched, fried, toſted. பொரிகிறான், he prittle-prattles. துப்பாக்கிபொரியுது, there is ſome firing of muſkets. பொரியல், a diſh of ſomething fried or roſted.

பொரிக்கிறது, to fry. இறைச்சியைப்பொரிக்கிறது, to roaſt meat. பொரித்தமீன், fried fiſh. குஞ்சுபொரிக்கிறது, to ſit on

on brood, to sit upon eggs. பொரிக்கிறவன், a prattler.

பொருகளம், the field of battle.

பொருக்கு, what is almost loose from the rest. பொருக்குநிலம், a ground whereof the superficies after growing dry growes loose from the ground below. பொருக்காங்கட்டி, a clot. பொருக்கறப்போறது, to be quite extinguish'd so that not the least thing remaines.

பொருட்டு, a thing of use, an emolument. பொருட்டாயிருக்கிறது, to be profitable, to be of use. அதிலேபொருட்டில்லை, no emolument arises thereof. இதுயார்பொருட்டு, whose property is this. உம்முட்டபொருட்டாயவந்தேன், I come on your behalf. ஒருபொருட்டாய்ப்பார்க்கிறது, to esteem a thing worth taking pains for it. அவனைரட்சிக்கும்பொருட்டாக, in order to save him, for to save him.

பொருந்துகிறது, to become joined together. பொருத்தவைக்கிறது, to imp, ingraft; to solder. எலும்புபொருந்திப்போச்சுது, the bone is put into joint. பொருந்தேன், I shan't agree, I shan't come to. போர்பொருந்துகிறது, to join battle.

பொருத்தம், பொருத்து, agreeing together, fitting one another.

பொருத்துகிறது, to make *things* agree to one another or join with one another.

பொருந்துகிறது, to be agreeable or pleasing. பொருந்திக்கொள்ளுகிறது, to agree with one *about the price or wages*. பொருந்திவாங்கிறது, to take after having agreed about the price. எனக்குப்பொருந்தாது, it does not please me.

பொருமுகிறது, to sigh or start in one's sleep. பொருமியழுகிறது, to shriek.

பொருள், a thing, a being; goods, riches. புதைபொருள், மறைபொருள், a hidden, occult or secret thing. நிழல், the shadow or sign of a thing, பொருள், the thing itself. கைப்பொருள், goods that are in one's possession. பொருளாறக்கைக்கொண்டேன், I have received *of you* the whole. பொருளாசை, avarice, desire of riches. பொருளாசைக்காறன், a covetous man.

பொல்லம், an evil. நல்லம்பொல்லம், good and evil.

பொலி, a heap of corn threshed but not yet winnowed.

பொலிகிறது, to cover *as a bull a cow, or a ram a sheep* etc. பொலிக்கிடாய், a ram or he-goat kept for covering the sheep or goats. பொலியெருது, a bull or steer. பொலிவு, increase of the cattle or sheep.

பொல்லாங்கு, பொல்லாப்பு, an evil. பொல்லாப்புப்பண்ணுகிறது, to deal ill or wickedly. பொல்லாதவன், a wicked man. பொல்லார்நல்லார், good and bad people. பொல்லாதவேலை, a thing not to be done. பொல்லாதநடக்கை, a bad life.

பொழிகிறது, to stream, run down, pour down, pour out. மழைபொழிஞ்சுபோகுது, it rains apace, it showers. பொழிகிறான், he is very charitable; he is very full of speech. பொழிபொழியென்றுதூற்றுகிறது, to winnow *corn* by shooting it out of baskets by little and little.

பொழிவு, affluence, emolument. தன்பொழிவைப்பார்க்கிறான், he is interested, he is all for self-ends.

பொழுது, the sun; the time; the different times in a day. பொழுதுவிடியுது, the sun rises. பொழுதுசாயுது (போகுது) the sun is going to set. பொழுதுசாய, in the evening. பொழுதுபுகுது (புகுதுபோகுது) the sun sets. பொழுதுபுக, at sun-set. பொழுதுபோக்கிறது, to spend the time. வீணேபொழுதுபோக்கிறது, to trifle away your time. பொழுதுபோக்காயிருக்கிறது, to make a merry day; to delay from day to day. ஏறுபொழுது, the fore-noon. இறங்குபொழுது, the after-noon. பொழுதுகாட்டுகுது, it seems we shall have rain to day. ஒருபொழுதுசாப்பிடுகிறது, to eat once a day. இரண்டுபொழுது, twice a day. மூன்றுபொழுதும், three times a day. அப்பொழுது, அப்போ, then. பொழுதுவணங்கி *v.* சூரியகாந்தப்பூ.

பொளிகிறது, பொளிந்துபோடுகிறது, to pick *a mill-stone etc.*

பொறணி, calumny, unthankfulness. பொறணிக்காறன், a person calumniating a benefactor. பின்பொறணிக்காறன், a backbiter, calumniator, slanderer.

பொறாமை *v.* பொறுக்கிறது.

பொறி, one of the senses; a spark of fire, a flake; the temples. ஐம்பொறி, the five senses. தீப்பொறி, a spark of fire. பொறிபறக்குது, sparks fly. பொறிமின்னுகுது, it glimmers. (பொறி) எலிப்பொறி, எலிப்பறி, a rat-trap.

பொறுக்கிறது, பொறுக்கிக்கொள்ளுகிறது, to pick, or gather up *something* from the ground. ஒருநிலத்தைக்கல்பொறுக்கிறது, to clear a ground from stones.

பொறுக்கிறது, to stay, to have patience; to bear, suffer or tolerate *a thing*. பொறுத்துக்கொள்ளுகிறது, to forgive, indulge. எனக்குப்பொறுக்காது, I cannot forbear it. பொறுப்பு, heaviness, weight; toleration. ஒருதன்மேலேபொறுப்புவைக்கிறது, to transfer an affair or business upon an other. பொறுப்பில்லவன், an envious man. பொறுப்பற்றனம், envy, rancor. பொறுமை, பொறுதி, patience. பொறுமையுள்ளவன், a patient man. பொறாமை, envy; impatience. ஒருதன்வாழ்வைப்பார்த்துப்பொறாமைப்படுகிறது, to envy one's happiness. பொறாமைக்காறன், an envious person. பொறாதவன், one that cannot bear an injury, or an affliction. தலைபொறாதவன், one that cannot carry a burden upon his head. முடிபொறுத்தராசா, a crowned king.

பொன், gold; a florin of 15. Madras-fanams. பொன்முத்திரை, a stamp to coin gold-coin with. பொன்னரிதாரம் *v.* அரிதாரம். பொன்னிறம், a goldish color. பொற்கட்டி, an ingot or wedge of gold. பொற்கம்பி, gold-wire. பொற்சரிகை, gold-thread. பொற்பணி, a golden trinket. பொற்பிடிப்பிரம்பு, a cane with a golden knop. பொற்பூச்சுப்பூசுகிறது, to gild, gild over. பொற்றகடு, a plate or flat piece of gold. செம்பொன், fine or pure gold. வெண்பொன், gold mixed with silver. பொன்னாங்கண்ணி, *the name of a kitchin-herb*. பொன்னுந்தட்டான், *the name of a bird*. Port. Parvoa. பொன்னுமட்டம் *v.* பூவந்தி. பொன்ன

ஓவாரை v. ஆவாரை.

✦ போகம், போகபோக்கியம், enjoyment of delight; prosperity; plentifulness. ஸ்திரீ போகம், a man's lying with his wife. போகி, a happy man. போகிக்கிறது, to enjoy delight. ஒருபோகம், ரெண்டுபோகம், a ground which produces one crop, or two crops, in a year.

போகை, a going. போகையிலே, in going.

போக்கடிக்கிறது, போக்கடித்துப்போடுகிறது, to lose *a thing*.

போக்கன், வழிப்போக்கன், a traveller. காக்கன்போக்கன், an unknown person.

போக்கடம், a way to get out, an escape.

போக்கர், a poor fellow, a vagabond.

போக்கிறது (போக்குகிறது) to put away, to cause to go out or away. பாவம்போக்கிறது, to expiate the sin. ஒருத்தனைமோசம்போக்கிறது, to deceive one. காலம்போக்கிறது, to pass the time away.

போக்கு, a way out; an evasion, excuse, subterfuge; a going; a waste. போக்குச்சொல்லுகிறது, to make excuses. போக்குமவரத்துமாயிருக்கிறது, to go to and fro. போக்குவிடுகிறது, to make an opening for draining the water off. ஆற்றுப்போக்கு, the water-course of a river. மலைப்போக்கு, a hilly country. வயிற்றுப்போக்கு, looseness of the belly. போக்குமிச்சமாய்ப்போகுது, there is a great waste. ஒருபோக்காய்ச்சொல்லுகிறது, to say for pastime's sake. ஒருபோக்காயிருக்குது, it is passable or tolerable. பொழுதுபோக்கு, pastime.

போங்காலம், the time past.

✦ போசனம், meat, food. போசனம்பண்ணுகிறது, to eat. போசனப்பிரியன், a glutton, a greedy feeder. போசனகலத்தாரி v. நாற்றங்காய.

✦ போஷணம்பண்ணுகிறது, to nourish.

✦ போஷிக்கிறது, to foster.

போடுகிறது, to lay, throw, cast. குதிரைக்குப்புல்லுப்போடுகிறது, to give the horse grass. பாகையைத்தலையிலேபோட்டுக்கொள்ளுகிறது, to put the turband upon your head. கல்லெல்லப்போடுகிறது, to throw, or fling, a stone. நங்கூரம்போடுகிறது, to cast anchor. சீட்டு(சீலி)போடுகிறது, to cast lots. நாய்க்குட்டிபோட்டுது, the bitch has whelped. ஆற்றிலேபோடுகிறது, to lanch *a thing* into the river. போட்டுவிடுகிறது, to loose *something*. அவனைக்கொன்றுபோடு, give him a stroke. அழித்துப்போடுகிறது, to destroy.

போட்டி, out-bidding, an endeavour to out-do one. போட்டியாய்வாங்கிறது, to purchase by being the highest bidder. போட்டியின்பேரிலே கொடுக்கிறது, to sell to the highest bidder. என்பேரிலேபோட்டியாயிருக்கிறான், he out-biddes me. போட்டிக்காரன், one who is used to out-bid others. போட்டிவழக்கு, a mutual accusing one another.

போட்டுகிறது v. புகட்டுகிறது.

போத v. போதும்.

✦ போதகம், doctrine, instruction. போதகம்பண்ணுகிறது, to instruct, teach. போதகன், a teacher.

போதரவு, flattery, coaxing. முகப்போதரவாய்ப்பேசுகிறது, to flatter.

போத்தை v. போர்வை.

போதிக்கிறது, போதிவிக்கிறது, to persuade, instruct.

(போது) அவன்வருகிறபோது, when he comes. முன்னொருபோது, in former times. இப்போது, now. அப்போது, then. எப்போதும், always.

போதும், it is enough. போதாது, it is not enough. போதுமென்றிருக்கிறது, to be content. போதும்போதாது, it is scarce enough. போதாநின்கிறது, to confess yourself not capable enough to fulfill your duty. போதக்கொடுக்கிறது, to give as much as is sufficient. கொஞ்சம்போதுஞ்சக்கரை, a little sugar. போதுமை, sufficiency; contentedness. போதாமை, insufficiency; intemperance.

போத்துகிறது v. போற்றுகிறது.

போத்துகிறது v. போர்க்கிறது.

போர்வை, போர்வைக்கட்டை, pieces of timbers covering the pillars.

போருகிறது, போர்ந்திருக்கிறது, to be sufficient. போர்ந்தமனுஷன், one who is capable enough for a business. போர்ந்தத்திரவியம், sufficient money. போரும், it is enough. போராது, it is not enough.

போர், a heap of corn in the field, thresh'd or not thresh'd. போருபோடுகிறது, to make a heap of it. போர்ப்படுக்கிறது, to put the corn that is reaped, on a threshing-floor. போரடிக்கிறது, to thresh. கதிர்ப்போர், a heap of corn not yet thresh'd. வைக்கல்ப்போர், a heap of straw. போருபிரிக்கட்டுகிறது, to tie the heap round about.

போர், ரணப்போர், a battle, fight. போர்க்களம், the field of battle. போராடுகிறது, போரிடுகிறது, to wrestle, fight, combate. போராட்டம், a combate, wrestling.

போர்க்கிறது, போர்த்துக்கொள்ளுகிறது, போர்வைபோர்த்துக்கொள்ளுகிறது, to put a cloak over your head and shoulders. போர்த்துகிறது, to cover *a thing*. போர்த்திக்கொள்ளுகிறது, to cover your head and shoulders. போர்வை, a cloak.

போலிச்சரக்கு, bad merchandise. போலிகாட்டுகிறது, to shew bad goods instead of good ones.

(போலுகிறது) to resemble, to be like. அதத்தகைமைபோன்றகாரியம், a thing like that. அந்தமிருகம்பன்றியைப்போலும், that animal is like a hog. போல், போலே, போல, so as, like as, even as; as soon as. எனக்குத்தகப்பனப்போலிருக்கிறான், he is as a father to me. நீர்செய்கிறப்போலே, நீர்செய்யுமாப்போலே, நீர்செய்கிறதுபோலே, so as you do. அப்பாலேபோற வர்போலகாண்பித்தார், he made as though he would have gone further. அவன்அதைச்சொன்னுப்போலே, as soon as he had said it.

போளம், *the name of a drug*. வெள்ளைப்போளம், myrrh. கரியபோளம், கஷ்டப்டணபோளம், aloes.

போறது (போகுகிறது) to go. அதைச்செய்யப்போறான், he will do it. வரப்போறான், he will come. ஞானியாய்ப்போறான், he turnes a philosopher. கொண்டுபோறது, to carry away. அப்படிபோகப்போகாது, there is no way to go. அப்படிபோகப்படாது, it is not permitted to go there.

